Regd : No. TN-MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE PAYMENT LICENCE NO G 6 - TN MS C P. P 55

**தியாகம்**

என் பின்னால் இருப்பவர்கள் லட்சாதிபதிகளல்ல, லட்சியத்தை உயிரெனக் கொண்ட தியாகச்செம்மல்கள்.




# அண்ணா




**பலம்**

எவ்வளவு நியாயமான லட்சியமும் பலம் இருந்தாலொழிய வெற்றி பெறமுடியாது.




மலர்: 8 சென்னை 20-9-1984 வியாழன் ** வெளியூர் 21-9-1984 வெள்ளி இதழ் 334

# ஆந்திர சட்டசபையில் புதிய சபாநாயகர் தேர்வு

# நம்பிக்கை தீர்மானம் நிறைவேற்றம்: 161 பேர் ஆதரவு

# என். டி. ராமராவ் வெற்றி

## பாஸ்கரராவ் கோஷ்டியினர் வெளிநடப்பு

**ஐதராபாத், செப் 20- ஆந்திர சட்டசபையில் இன்று நடந்த 30 நிமிட கூச்சல் குழப்பத்திற்குப் பிறகு புதிய சபாநாயகர் தேர்தல் நடந்தது. என். டி. ராமராவ் அரசு மீது நம்பிக்கை தீர்மானம் நிறைவேறியது. பாஸ்கரராவ் குழுவினர் வெளிநடப்பு செய்து கவர்னரை சந்தித்தனர்.**

ஆந்திர மாநில சட்டசபை இன்று காலை 8-30 மணிக்குகூடியது.

புதிய சபாநாயகர் தேர்தலை ஆட்சேபித்து மஜ்லிஸ் கட்சி இந்திரா காங்கிரஸ் மற்றும் பாஸ்கரராவ் கோஷ்டி தெலுங்கு தேசு கட்சி எம். எல். ஏக்கள் சட்ட சபையிலிருந்து வெளி நடப்பு செய்தனர்.

கடந்த ஆகஸ்டு மாதம் 16ந் தேதி என். டி. ராமராவ் மெஜாரிட்டி இழந்துவிட்டார் என்று கூறி அவரது அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

பாஸ்கரராவ் தலைமையில் புதிய அமைச்சரவை பதவி ஏற்றுக்கொண்டது. தனக்கு இருக்கும் மெஜாரிட்டியை நிருபிக்க பாஸ்கரராவுக்கு 1 மாத கால அவகாசம் தரப்பட்டது.

எனக்கு 165 எம். எல். ஏக்களின் ஆதரவு இருக்கையில் எனது அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்தது சரிதானா என்று என். டி. ராமராவ் மக்கள மன்றத்தில் முறையீடு செய்தார். அவருக்கு ஆதரவாக எதிர்க்கட்சிகள் வரிந்து கட்டிக் கொண்டு ஓரணியில் நின்றன.

இம்மாதம் 11-ந் தேதி சட்டசபை கூடியது. ஆனால் அலுவல் எதுவும் நடைபெறவிடாமல் கூச்சலும் குழப்பமாக இருந்தது.

### சட்டசபை கூடியது

தற்காலிக சபா நாயகராக இருந்த பாகா ரெட்டி தனது பதவியை ராஜினாமா செய்து விட்டார் இதையடுத்து மஜ்லிஸ் கட்சி உறுப்பினர் சலாவுதீன் ஒவாய்சி தற்காலிக சபாநாயகராக தேர்வு செய்யப்பட்டார்.

சட்டசபை மீண்டும் 20ந் தேதி கூடும் என்று அறிவிக்கப்பட்டு ஒத்தி வைக்கப்பட்டது.

இதற்கிடையில் 1 மாத காலத்தில் மெஜாரிட்டியை நிருபிக்க முடியாததால் பாஸ்கரராவ் அமைச்சரவை பதவி விலகியது.

இதையடுத்து மீண்டும் அமைச்சரவை அமைக்குமாறு என். டி. ராமராவை மாநில கவர்னர் எஸ். டி. சர்மா கேட்டுக் கொண்டார்.

அதன்படி முதல்வர் என். டி. ராமராவ் தலைமையில புதிய அமைச்சரவை பதவி ஏற்றது.

சட்டசபை கூடும் அன்றே (20-ந் தேதி) எனது அமைச்சரவை மீது நம்பிக்கை ஓட்டு கோரும் தீர்மானம் கொண்டு வருவேன் என்று என். டி. ராமராவ் கூறினார்.

தற்காலிக சபாநாயகராக இருந்த ஓவாய்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டு, மகேந்திரநாத் தற்காலிக சபாநாயகராக அறிவிக்கப்பட்டார்.

இன்று காலை 8-30 மணிக்கு ஆந்திர சட்டசபை கூடியது. நிகழ்ச்சி நிரலில் முதலில் சபாநாயகர் தேர்வும் பின்னர் உறுப்பினர் வாசுதேவராவ் மறைவுக்கு அனுதாப தீர்மானமும் அதன் பின்னர் நம்பிக்கை ஓட்டு கோரும் தீர்மானமும் இடம் பெற்றிருந்தன.

### 30 நிமிடம் கூச்சல் குழப்பம்

சபாநாயகர் தேர்வு நடை பெறுவதற்கு முன்பாக பாஸ்கரராவ் கோஷ்டி எம். எல். ஏக்கள் ஒரு ஒழுங்கு பிரச்சினையை எழுப்ப முயன்றனர்.

தற்காலிக சபாநாயகராக இருந்த சலாவுதீன் ஒவாய்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டது பற்றியதாகும் அந்த ஒழுங்கு பிரச்னை

இதனையடுத்து சபையில் கூச்சல் குழப்பம் ஏற்பட்டது.

உறுப்பினர்கள் மேஜையை பலமாக தட்டினார்கள் சபாநாயகரை நோக்கி பேப்பர் பந்துகள் வீசப்பட்டன சபாநாயகரை சுற்றி பலத்த பாதுகாப்பு இருந்த போதிலும் உறுப்பினர்கள் ஆவேசமாக அவரை நோக்கி ஓடினார்கள் சுமார் 30 நிமிட நேரம் இந்த நிலை நீடித்தது.

ஓட்டெடுப்பை தடுக்க முயன்ற பாஸ்கரராவ் கோஷ்டியை சேர்ந்த 4 எம் எல் ஏக்களை சபையிலிருந்து அப்புறப்படுத்துமாறு தற்காலிக சபாநாயகர் பொறுப்பு ஏற்றிருந்த மகேந்திரநாத் உத்திரவிட்டார்

அதன்பேரில் அந்த எம். எல். ஏக்களை சட்டசபை காவலர்கள் அலாக்காக தூக்கி வந்து சபைக்கு வெளியே விட்டனர்.

### எதிர்கட்சியினர் வெளிநடப்பு

சபாநாயகர் தேர்தல் ரகசிய ஓட்டெடுப்பு முறைக்கு மாறாக நடைபெறுகிறது என்று குற்றம் சாட்டி இந்திரா காங்கிரஸ், மஜ்லிஸ்கட்சி, பாஸ்கரராவ் கோஷ்டி எம். எல். ஏக்கள சபையிலிருந்து வெளிநடப்பு செய்தனர்.

அதன் பின்னர் புதிய சபாநாயகர் தேர்தல் அமைதியாக நடந்தது என். வெங்கடரத்னம் புதிய சபாநாயகராக அறிவிக்கப்பட்டார். அவருக்கு 169 ஓட்டுக்களும் அவரை எதிர்த்து போட்டியிட்ட பாஸ்கரராவ் கோஷ்டியை சேர்ந்த விஜயராமராஜுக்கு 9 ஓட்டுக்களும் கிடைத்தன. செல்லாதவை 4 ஓட்டுக்கள் ஆகும்.

புதிய சபாநாயகர் தேர்ந்து எடுக்கப்பட்ட பின்னர் என். டி. ராமராவ் அமைச்சரவை மீதான நம்பிக்கை ஓட்டு கோரும் தீர்மானம் கொண்டு வரப்பட்டது.

### நம்பிக்கை தீர்மானம்

இந்த தீர்மானத்திற்கு ஆதரவாக 161 ஓட்டுக்கள் கிடைத்தன இதன் மூலம் சட்டசபையில் என். டி. ராமராவ் மெஜாரிட்டி நிருபிக்கப்பட்டு விட்டது.

சபாநாயகர் தேர்தலின் போது கிடைத்த ஓட்டுக்களைவிட 8 ஓட்டுக்கள் குறைவாக இருக்கவே மறு எண்ணிக்கை செய்ய வேண்டும் என்று அமைச்சர் சீனிவாசலு ரெட்டி வேண்டுகோள் விடுத்தார் இதனை சபாநாயகர் வெங்கடரத்னம் ஏற்றுக் கொள்ளவில்லை.

### சபை ஒத்திவைப்பு

இதையடுத்து சபாநாயகர் வெங்கடரத்னம் சபையை காலவரையின்றி ஒத்தி வைத்தார்.

சட்டசபையிலிருந்து வெளி நடப்பு செய்த இந்திரா காங்கிரஸ் கட்சி தலைவர் மதன் மோகன் மஜ்லிஸ் கட்சி தலைவர் சலாவுதீன் ஒவாய்சி முன்னாள் முதல்வர் பாஸ்கரராவ் ஆகியோர் கவர்னர் எஸ். டி. சர்மாவை காலை 9-45 மணியளவில் சந்தித்தனர்.

### புகார்

பின்னர் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் புதிய சபாநாயகர் தேர்தலின் போது ரகசிய ஓட்டு எடுப்பு முறை பின்பற்றப்படவில்லை. எனவே மறு தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டதாக கூறினர். ஓட்டுபோடுவதை மப்டி உடை அணிந்தவர்கள் பார்த்துக் கொண்டிருந்ததாக குறிப்பிட்டனர்.

சட்டசபையில் தாக்கப்பட்டதாக கூறப்படும் பி. கோபால், செயலுஎன்ற 2 உறுப்பினர்கள் கவர்னர் மாளிகைக்கு ஸ்ட்ரெச்சரில் வைத்து எடுத்து வரப்பட்டனர்.

தஞ்சையில் நடந்த ராஜராஜ சோழன் விழாவில் நினைவு கலைவேந்தர் ராமையாவுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் விருது வழங்கினார். அமைச்சர் அரங்கநாயகம் நிகழ்ச்சியில் பங்கேற்றார்

8-ம் பத்தி தொடர்ச்சி

கின்றன.

சென்னையில் ரூ. 28 லட்சம் முதலீட்டில் அமைக்கப்பட்டுள்ள அச்சகத்தில் 75 பேர் பயன் அடைகிறார்கள்.

சென்னை, மதுரை ஆகிய இடங்களில் ரூ 13.26 லட்சத்தில அமைக்கப்பட்டுள்ள தச்சு தொழிலகத்தில 100 பெண்கள் பயனடைகிறார்கள்

சத்துணவு கூடத்திற்கு தேவையான குழந்தைகள் பொம்மை செய்யப்படுகின்றன.

எல்காட் உதவியுடன் தொலைக்காட்சிகளில் பயன்படுத்தும் ஒலி பெருக்கி செய்யும் தொழிற்சாலை ரூ 6 லட்சம் செலவில் துவக்கப்பட்டுள்ளது.

இப்போது 20 பெண்கள் இதில் பணியாற்றுகிறார்கள் அடுத்த ஆண்டு விரிவு படுத்தப்படும்.

சென்னையில் ரூ 6 லட்சம் செலவில் அமைக்கப்பட்டுள்ள ஸ்கிரீன் பிரிண்டிங்கில் 50 பெண்கள் பயனடைகிறார்கள்.

பெண்களே நடத்தும் தொழிலகம் (ரொட்டி தயாரித்தல் போன்றவை) அமெரிக்க உதவியுடன் 6 பெண்கள் துவக்க உதவி அளிக்கப்பட்டுள்ளது தர்மபுரி பெரியார் மாவட்டங்களில் 15-20 பெண்களை கொண்ட 10 குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்தக் குழுக்களில் உள்ள 200 பெண்களும் பெட்ஷீட் தயாரித்தல் போன்ற தொழில்களை நடத்துவதற்கு ரூ 15 ஆயிரம் உதவப்பட்டுள்ளது.

செங்கற்பட்டு மாவட்டத்தில் இதுபோன்று 30 குழுக்கள் அமைக்கப்பட்டு அதில் 650 பேர் பயனடைகிறார்கள்.

இவ்வாறு, அமைச்சர் கூறினார்.

### தமிழ்நாடு அரசு 155-வது லாட்டரியில்

## பண்ருட்டி, தர்மபுரி, மதுரைக்கு முதல் பரிசு ரூபாய் ஒரு லட்சம்

**சென்னை, செப். 20- தமிழ்நாடு அரசின் 155 வது லாட்டரியில் பண்ருட்டி, மதுரை, தர்மபுரி ஆகிய ஊர்களுக்கு முதல் பரிசு தலா ரூ. 1 லட்சம் கிடைத்துள்ளது.**

தமிழ்நாடு அரசு லாட்டரியின் 155-வது குலுக்கல் இன்று காலை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது.

முடிவுகள் விவரம் வருமாறு:-

**பி. வி. வரிசை**

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
**236373**
பண்ருட்டி

2-வது பரிசு
ரூ 10 ஆயிரம்
216634 தூத்துக்குடி
484914 நத்தம்

**பி. டபிள்யூ**

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
**077125**
மதுரை. தெற்கு

2 வது பரிசு
ரூ 10 ஆயிரம் வீதம்
478845 மயிலாடுதுறை
367105 ராமநாதபுரம்

**பி எக்ஸ்**

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
**595229**
தர்மபுரி

2-வது பரிசு
ரூ 10 ஆயிரம் வீதம்
515986
மதுரை தெற்கு

163694
தஞ்சாவூர்

3 வது பரிசு
ரூ. 500 வீதம்
கீழ் கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும்.

| | | |
|---|---|---|
| 96181 | 36904 | 16249 |
| 45915 | 96741 | 98082 |
| 07617 | 89073 | 60823 |
| 62047 | | |

4-வது பரிசு
ரூ. 50 வீதம்
கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும்

| | | |
|---|---|---|
| 1417 | 8927 | 4120 |
| 0727 | 6565 | 6240 |
| 2616 | 1935 | 8195 |
| 4105 | | |

5- வது பரிசு
ரூ. 20 வீதம்
கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு

| | | |
|---|---|---|
| 0890 | 2154 | 8972 |
| 5507 | 0079 | 8774 |
| 8229 | 7245 | 7001 |
| 8990 | | |

6. வது பரிசு
ரூ 10 வீதம்
கீழ்க்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு

| | | | |
|---|---|---|---|
| 468 | 286 | 495 | 655 |
| 782 | 437 | 903 | 009 |
| 074 | 059 | | |

7 வது பரிசு
ரூ 5 வீதம்

| | | | | |
|---|---|---|---|---|
| 255 | 701 | 212 | 895 | 664 |
| 086 | 494 | 217 | 908 | 678 |

| | | |
|---|---|---|
| 204 | 961 | 137 |
| 575 | 605 | 900 |
| 708 | 550 | 661 |
| 492 | | |

## ஊழல் நரியே யாரை சொன்னாய்?

கூரைமீதேறி கொக்கரிக்கும்
கோழிக்குஞ்சே!
ஊரை அடித்து உலையில் இட்ட
ஊழல்நரியே!
நூறு சாதனைகள் செய்துள்ள
வள்ளல் தன்னை -
நாறும் வாயெடுத்து
யாரையடா சொன்னாய்?

-அண்ணாநகர் ஔவையார்

### பெண்கள் பொருளாதார மேம்பாட்டுக் கழகத்தின் மூலம்

## 1600 பெண்கட்கு இதுவரை வேலைவாய்ப்பு

### அமைச்சர் கோமதிசீனிவாசன் பேட்டி

**சென்னை, செப். 20- பெண்கள் பொருளாதார மேம்பாட்டுக் கழகத்தின் மூலம் ஜனவரி முதல் இதுவரை 1600 பேர்கட்கு வேலை வாய்ப்பு உதவி அளிக்கப்பட்டு இருப்பதாக அமைச்சர் கோமதி சீனிவாசன் கூறினார்.**

தமிழக சமூக நலத்துறை அமைச்சர் கோமதி சீனிவாசன் நிருபர்களிடம் கூறியதாவது:

கடந்த ஆண்டு டிசம்பர் மாதம் ஆரம்பிக்கப்பட்ட பெண்கள் பொருளாதார மேம்பாட்டுக் கழகம் ஜனவரி மாதத்தில் பணியை துவங்கியது.

இதுவரை 1600 பேர்கட்கு இதன் மூலம் வேலை வாய்ப்பு மற்றும் சுய வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டு இருக்கிறது.

மதுரை ராமநாதபுரம் மாவட்டங்களில் 25 சதவிகித மானியத்துடன் தலா ரூ. 2500 கடன் உதவி கறவைமாடு வாங்குவதற்காக 200 பேர்களுக்கு அளித்துள்ளோம்.

அதே போல் மதுரை, புதுக்கோட்டை மாவட்டங்களில் 200 பேர்களுக்கு ஆடு வளர்க்க உதவி அளிக்கப்பட்டிருக்கிறது.

நார்வே நாட்டு உதவியுடன் 3 பெரிய தொழில் பிரிவுகள் அமைக்கப்பட்டு இருக்

1-ம் பத்தி பார்க்க

அண்ணா

சென்னை 20-9-1984

# முதல்வர் கிளப்பிய முக்கிய பிரச்சினை

சாஸ்திரி - சிரிமாவோ ஒப்பந்தத்தின்படி, இலங்கை வசம் ஒப்படைக்கப்பட்ட கச்சத்தீவில் சிங்கள ராணுவம் ஆயுதங்களை குவித்து, ராணுவப் பயிற்சி பெற்று வருகிறது.

கச்சத்தீவை ராணுவ காரியங்களுக்குப் பயன்படுத்தக் கூடாது என்பது அப்போதைய ஒப்பந்தத்திலுள்ள ஒரு ஷரத்து.

"தற்போதைய பிரதமர்களுக்குப் பிறகும் இந்த ஒப்பந்தம் பின்னால் வரும் அரசுகளால் கடைப்பிடிக்கப்படுமா" என்று பிரதமர் சாஸ்திரியிடம் செய்தியாளர்கள் கேட்டபோது அகில இந்திய காங்கிரஸ் தலைவராக இருந்த காமராஜர் பதிலளித்தார்.

"இருநாடுகளின் ஆட்சித்தலைவர்கள் செய்து கொள்ளும் ஒப்பந்தமானது அந்தத்தலைவர்களுக்கு பின்னால் வரும் ஆட்சியாளர்களாலும் மதிக்கப்பட்டு போற்றப்படவேண்டும். இது சர்வதேசமரபு இந்த ஒப்பந்த விஷயத்திலும் எதிர்பார்ப்பது நியாயமே" என்று காமராஜர் அளித்த பதிலை பிரதமர் லால்பகதூர்சாஸ்திரி ஏற்றுக் கொண்டு, "ஆம் அது தான் எனது பதிலும்" என்று அதிகார முத்திரை குத்தினார்.

சர்வதேச மரபுகள், மனிதகுல நாகரிகங்கள், மனிதாபிமானம் அனைத்தையும் கைவிட்டு நிற்கும் தற்போதைய இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே, இந்த கச்சத்தீவு விஷயத்திலும் ஒப்பந்த விதிமுறைகளை மீறியுள்ளார்.

கச்சத்தீவில் சிங்கள ராணுவத்தையும் ஆயுதங்களையும் இலங்கை அரசு குவித்துள்ளது. சிங்கள ராணுவத்தினருக்கு இஸ்ரேல் அதிரடிப்படையான "மொசாத்" போர் பயிற்சி அளித்து வருகிறது.

இலங்கையின் இந்த அடாவடித்தனமான செயலை முதல்வர் புரட்சித்தலைவர் கண்டித்துள்ளார்

"இது இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை மீறுவதாகும். இந்தியப் பேரரசு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இதைத் தடுக்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்கும் என்று நம்புகிறேன்" என்று புரட்சித் தலைவர் குறிப்பிட்டிருப்பது, மத்திய அரசின் கவனத்துக்குச் சென்று ஆழ்ந்த பரிசோதனைக்குள்ளாகி இருக்கக் கூடும்.

தமிழகத்தில் ராமேஸ்வரத்திலிருந்து கிழக்கே பதினெட்டே மைல் தூரத்தில் உள்ள கச்சத்தீவில் எத்தகைய அத்துமீறிய செயலில் இலங்கை ஈடுபட்டாலும் அது இந்தியாவை குறிப்பாக தமிழகத்தின் நலனைப் பெரிதும் பாதிக்கக்கூடியதாக இருக்கும் என்பதை எவரும் மறுக்க மாட்டார்கள்.

இந்திய-இலங்கை நாடுகளைச் சேர்ந்த ரோமன் கத்தோலிக்கர்களின் திருவிழா நடைபெறும் திருப்பூமியாகவும், மீனவர்களின் ஓய்வுக் கூடமாகவும் பயன்படுத்தப்பட்டுவரும் கச்சத்தீவை கொலைக் களமாக்க முயலும் ஜெயவர்த்தனே உலக நாடுகளின் கண்டனத்திற்குரியவர்

தமிழர்களை இனப்படு கொலை செய்யும் காட்டேரியாகக் கருதப்படும் இலங்கை அரசு, கச்சத் தீவிலும் தனது கோரக் கால்களை ஊன்றி ஊழிக் கூத்தாட முயற்சிப்பதை முளையிலேயே கிள்ளி எறிவது அவசியம்.

முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரிப்பின் முகங்கட்ட சிந்தனை, இந்தக் கருத்தைத்தான் வலியுறுத்த வைக்கிறது.

---

## பாரி ஆலை நிர்வாகத்துடன்

# ரகசிய ஒப்பந்தம் செய்து சி.ஐ.டி.யூ. அடித்தகொள்ளை

## வை. பெருமாள் அறிக்கை

**சென்னை, செப் 20. நெல்லிக்குப்பம் பாரிசர்க்கரை ஆலை நிர்வாகத்துடன் சி. ஐ. டி. யூ யூனியன் ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டு அடித்த கொள்ளைகளை வை. பெருமாள் அம்பலப்படுத்தியுள்ளார்.**

அண்ணா தொழிற்சங்க பேரவைப் பொதுச்செயலாளர் வை. பெருமாள் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

நெல்லிக்குப்பம் தொழிலாளர் பிரச்சினையில் அரசு தொழிலாளர்களுக்குச் சாதகமாக எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்றும் தீக்கதிரில் குறிப்பிட்டிருக்கிறார்கள் நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை தொழிலாளர் பிரச்சினையை விரிவாக சொல்லவேண்டிய அவசியத்தை அவர்கள் ஏற்படுத்திவிட்டதால் சொல்கிறோம்.

நெல்லிக்குப்பம் இஐடி பாரி சர்க்கரை ஆலையை பொறுத்தவரை 1969 முதல் 1977 வரை அரவை திறன் அதிகரிக்கப்பட்டதற்கு உரிய கூடுதல் தொகை வழங்கப்படாமல் இருந்த காரணத்தால் தொழிலாளர்கள் பெருமுயற்சி எடுத்துப் போராடியும் அன்றைய கருணாநிதி அரசு அவர்களின் அந்தக் கோரிக்கையை ஏற்கவில்லை. ஆனால் டாக்டர் புரட்சித் தலைவர் அரசு ஏற்பட்டவுடன் ரூ15,000 செலவு செய்து, தனி தொழில் நீதிமன்றம் அமைத்து நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை தொழிலாளர்களின் அந்தக்கோரிக்கையை விசாரித்து, தீர்ப்பளிக்க உத்தரவிட்டது.

### சி.ஐ.டி.யூ. ஒப்புதல்

அந்த தீர்ப்பின் படி தொழிலாளர்களுக்கு சுமார் 36 லட்சம் நிர்வாகம் வழங்க வேண்டும் ஆனால் அந்த தொழிற்சாலையில் இயங்கி வந்த ஒரே சங்கமான சி.ஐ.டி.யு மிகவும் வெட்கக்கேடான முறையில் தொழிலாளர்களுக்கு துரோகம் இழைத்து, நிர்வாகத்துடன் ரகசிய பேரம் பேசி நேரடியாக இருதரப்பு ஒப்பந்தம் 18 (1) செய்து கொண்டது. அதன்படி தொழிலாளர்களுக்கு தீர்ப்பின்படி கிடைக்கவேண்டிய 36 லட்சத்திற்கு பதிலாக 14.5 லட்சம் மாத்திரம் கொடுத்தால் போதும் என்று சிஐடியு. தலைமை ஒப்புக் கொண்டு கையெழுத்திட்டது.

இந்த 14,5 லட்சமும் முழுமையாக தொழிலாளர்களுக்கு வழங்கப்படவில்லை. அதில் 2 லட்சம் ரூபாய் காசோலையாக சி ஐ. டி. யு. தொழிற்சங்கத் தலைவரின் பெயருக்கு தொழிலாளர்களுக்கு தெரியாமல் வழங்கப்பட்டது.

அந்த காசோலையை அவர் தன் பெயரில் வங்கிக் கணக்கில் போட்டுக் கொண்டார். பின்னர் தொழிலாளர்களுக்கு வழங்கப்பட்ட 12.5 லட்சத்திலும் அச்சங்கத்திற்கென ரூ 39,000 கட்டாய வசூல் செய்யப்பட்டது. இந்த இரண்டு வசூல்களுக்கும் தொழிற்சங்கத்தின் பொது உறுப்பினர் கூட்டத்தில் முறையாக ஒப்புதல் பெறவில்லை.

சி. ஐ. டி. யு. தலைவர்கள் ஏதோ மோசடி செய்கிறார்கள் என்று சந்தேகப்பட்ட தொழிலாளர்கள் புரட்சித் தலைவர் அரசுக்கும் அண்ணா தொழிற்சங்கப் பேரவைக்கும் புகார்களைத் தெரிவித்தனர்.

தொழில் நீதிமன்றத் தீர்ப்பின் படி முழுத் தொகையை தொழிலாளர்களுக்கு நிர்வாகம் வழங்காதது குறித்து அரசு நடவடிக்கை எடுத்து வழக்கு தாக்கல் செய்யப்பட்டது இந்த வழக்கு உச்ச நீதிமன்றத்தில் இன்னும் நடைபெற்று வருவது 14½ லட்சம் ரூபாய் ஒப்பந்த ஈட்டு அதில் 2,39,000 ரூபாய் சி ஐ. டி. யு. தலைவர் பெற முடிந்தது என்றால் நிர்வாகத்திற்கு விட்டுக் கொடுக்கப்பட்ட 21.5 லட்சத்திற்கு எத்தனை லட்சம் ரூபாய் மறைமுகமாக சி. ஐ. டி. யு. தலைமை பெற்றார்கள் என்பதை ஆண்டவனும் யாரும் வெளியிடவில்லை.

சி ஐ டி. யு வினர் தொழிலாளர்களை ஏமாற்றி துரோகம் செய்வது ஒன்றும் புதிதல்ல, நெல்லிக்குப்பத்தில் 1970-லேயே சங்கத்திற்கென்று வசூலித்தநிதியை சி ஐ. டி. யு. தலைவர் தேர்தலுக்கு பயன்படுத்தி விட்டார் என்று தொழிலாளர்களால் புகார் செய்யப்பட்டு அன்றைய தி. மு. க. அரசு நீதிமன்றத்தில் வழக்கைத் தொடுத்தது

பின்னர் சி. ஐ. டி. யு. வும் தி. மு. க. தலைமையும் சமரசம் பேசி அந்த வழக்கை 'தொழில அமைதியை' கருதி திரும்பப் பெறுவதாக அன்றைய அரசு உத்தரவிட்டது. இதுபோல நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலையில் தி.மு.க. அரசும், சி ஐ. டி. யு. நிர்வாகமும் கூட்டாகச் சேர்ந்து கொண்டு தொழிலாளர்களுக்குத் தொடர்ந்து துரோகம் விளைவித்தன.

ஆலையில் காலியாக உள்ள இடங்களை உடனடியாக நிரப்ப வேண்டும் எனத் தொழிலாளர் சங்கம் கோரிக்கை வைத்தது ஆனால் நிர்வாகம் ஏற்கவில்லை மற்ற ஆலைகளை விட ஊதியமும், சலுகைகளும் அதிகமாக வழங்குவதாகவும் தேவைக்கு அதிகமாக தொழிலாளர்கள் இருப்பதாகவும் வாதாடியது இந்த பிரச்சினையில் சுமுக முடிவு ஏற்படவில்லை.

இரு தரப்பினரும் எந்த விதமான ஏற்பாட்டிற்கும் வரத் தயாராக இல்லை. நிர்வாகம் ஆலையை மூடி விடுவதாக அறிவிப்புக் கொடுத்தது.

டாக்டர் புரட்சித்தலைவர் அரசு அந்த ஆலையை அரசே ஏற்று நடத்துவது குறித்து மத்திய அரசுக்கு கடிதம் எழுதியது. மத்திய அரசின் ஒப்புதல் கிடைக்கவில்லை.

உடனடியாக டாக்டர் புரட்சித் தலைவர் அரசு 10 (பி) யைப் பயன்படுத்தி ஆலை மூடுவதைத் தடுத்து எல்லா தொழிலாளர்களுக்கும் தொடர்ந்து வேலை கொடுக்கவேண்டுமென்றும் தொழில் நீதிமன்றத்தில் ஆறு மாதத்திற்குள் தீர்ப்பினை வழங்க வேண்டுமென்றும் 1-8-83ல் ஆணையிட்டது.

இதற்கிடையில் தமிழக அரசு 10 (பி)-யைப் பயன்படுத்தி ஆலை மூடுவதை தடுக்கவேண்டும் என உத்தரவு இடவேண்டும் என்று கோரி உச்ச நீதிமன்றத்தில் மனு ஒன்றை சி. ஐ. டி. யு. சங்கம் தாக்கல் செய்தது.

ஆனால் அதே சி ஐ டி யுவினர்கள் தான் தொழிற் தகராறு சட்டம் 10 (பி)-யை புரட்சித்தலைவர் அரசு சட்டமன்றத்தில் கொண்டுவந்து நிறைவேற்றியபோது 'இது தொழிலாளர்கள் விரோத சட்டம்' என்று எதிர்த்து வெளிநடப்பு செய்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அன்று அவர்களுடன் சேர்ந்து தி. மு. க. வினரும் எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

சி. ஐ. டி. யு. சங்கமும் நிர்வாகமும் உச்ச நீதிமன்றத்திற்குச் சென்றதன் விளைவாக உச்ச நீதிமன்றம் நிர்வாகத் தரப்பு வாதங்களையும் பரிசீலித்து 950 தொழிலாளர்களைக் குறைத்துக் கொண்டு மீதி 952 தொழிலாளர்களைக் கொண்டு ஆலையை நடத்த வேண்டுமென்றும் தமிழக அரசு சிறப்பு நீதிமன்றம் அமைத்து 3 மாதத்தில் தீர்ப்பு கிடைக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமெனவும் உத்தரவிட்டது. அதன்படி சிறப்பு நீதிமன்றம் அமைக்கப்பட்டது.

உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பை ஒட்டி சிறப்பு நீதிமன்றம் 925 ஆட்கள் இருந்தால் போதும் என்ற தீர்ப்பினை வழங்கியது. இந்த ஆட்குறைப்புக்கும் டாக்டர் புரட்சித்தலைவர் அரசுக்கும், ஆளும் இயக்கத்திற்கும் எந்தவிதமான தொடர்பும் கிடையாது.

"சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டி" என்பதைப் போல இந்தப் பிரச்சினையை உச்சநீதிமன்றத்திற்கு எடுத்துச் சென்று தொழிலாளர்களைத் தெருவில் நிறுத்தி விட்டனர் சி. ஐ. டி. யு. வினர்

சிறப்புநீதிமன்றத் தீர்ப்புக்குப் பிறகு சி.ஐ டி.யு. வினர் அறிவித்த வேலை நிறுத்தத்தை தொழிலாளர்கள் கைவிட்டுக பணிக்குச் சென்று விட்டார்கள். இவ்வளவு வினைக்கும் காரணம் சி.ஐ.டி.யு. தலைவரின் முறையற்ற போக்கும், நிதானமற்ற அணுகுமுறையும் என்பதை தொழிலாளர்கள் நன்கு உணர்ந்துகொண்டார்கள்

இவ்வாறு வை. பெருமாள் தெரிவித்துள்ளார்.

---

தஞ்சையில் நடந்த ராஜராஜ சோழன் விழாவில் அரசு கலைஞர்களுக்கு விருது வழங்கப்பட்டது முதல்வர் புரட்சித்தலைவரிடம் இருந்து பத்மா சுப்பிரமணியம் விருது பெறுகிறார்.

---

## இந்த ஆண்டில் மட்டும்

# 15 ஆயிரம் பேருக்கு மனைப்பட்டா-ரூ273 லட்சம் கடனுதவி

## என். வி. என். செல்வம் தகவல்

**சென்னை, செப். 20- தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தின் சார்பில் இந்த ஆண்டு 15 ஆயிரம் பேர்களுக்கு மனைப்பட்டாவும் கடன் தொகை ரூ. 273 லட்ச ரூபாயும் வழங்கப்பட உள்ளதாக அதன் தலைவர் என். வி. என். செல்வம் தெரிவித்தார்.**

சென்னை திருவல்லிக்கேணி, மயிலாப்பூர் ஆகிய பகுதிகளில் உள்ள குடிசை பகுதி மக்கள் 91 பேர்களுக்கு மனைப்பட்டாவும் கடன் தொகையையும் குடிசைமாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம் வழங்கினார்.

சென்னை காமராஜர் சாலையில் உள்ள வாரியத்தின் தலைமை அலுவலகத்தில் நடைபெற்ற மனைப்பட்டா வழங்கு விழாவில் சைதை துரைசாமி கடும்பாடி மற்றும் அதிகாரிகள் கலந்து கொண்டனர்.

விழாவில் வாரியத் தலைவர் என். வி. என். செல்வம் பேசுகையில் கூறியதாவது:-

சென்னை நகரில் கடந்த 81-ம் ஆண்டு முதல் 84-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் வரை 28 ஆயிரத்து 900 பேர்களுக்கு மனைப்பட்டாவும் 20 ஆயிரத்து 50 பேர்களுக்கு வீட்டு அபிவிருத்தி கடனும் வழங்கப்பட்டிருக்கிறது.

வீட்டு அபிவிருத்திக்காக 573 லட்ச ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அதில் இதுவரை 344 லட்ச ரூபாய் அளிக்கப்பட்டுவிட்டது.

இந்த ஆண்டில் மட்டும் 15 ஆயிரம் பேர்களுக்கு 273 லட்ச ரூபாய் கடனும் மனைப்பட்டாவும் வழங்கப்படும்.

### மனைபட்டா-கடன் உதவி அளிப்பு

அதன்படி திருவல்லிக்கேணி கஜபதிலாலா தோட்டத்தில் உள்ள 187 பேர்கள் மனைப்பட்டாவும் கடனுதவியும் பெறுகின்றனர்.

அவர்களில் 76 பேர்களுக்கு பட்டாவும் 64 பேர்களுக்கு கடன் தொகை 64 ஆயிரம் ரூபாய் முதல்கட்டமாக இன்று வழங்கப்படுகிறது.

அதேபோல் மயிலாப்பூர் காட்டுக்கோவில்பகுதியில் உள்ள 21 குடும்பங்களுக்கு பட்டாவும் கடனுதவி 49 ஆயிரம் ரூபாயும் அளிக்கப்படுகிறது.

முதல்கட்டமாக 14 ஆயிரம் ரூபாய் கடனுதவியும் 15 பேர்களுக்கு மனைப் பட்டாவும் இன்று வழங்கப்படுகிறது.

இவ்வாறு என். வி. என். செல்வம் கூறினார்

சென்னை அண்ணா நகர் தொகுதி 73வது வட்டத்தில் உள்ள தமிழர் நகரில் என். வி. என். செல்வம் சென்று அப்பகுதி மக்களின் குறையைக் கேட்டார்.

அப்பகுதி மக்கள் பொது கிணறும் சாலை வசதியும் செய்து தருமாறு கேட்டுக் கொண்டனர் அவர்களின் கோரிக்கைகளைக்கேட்டு ஆவன செய்வதாக செல்வம் தெரிவித்தார்.

அவருடன் ஏ.சி. சண்முகம் எம் எல். ஏ. பாபு, மற்றும் வாரிய அதிகாரிகள கழகத் தோழர்கள் சென்றனர்.

---

இந்திய அரசாங்கம்

### அணு மின் சக்தி இலாகா. பொது சேவை நிறுவனம்

டெண்டர் அறிவிப்பு எண்: Gso - Civil- கட்டுமானம் - 1- 84.

இந்திய குடியரசுத் தலைவர் அவர்கள் சார்பில் அவர்களுக்காக கல்பாக்கம் புதுப்பட்டினம் கேந்திரிய வித்யாலயா -I ல் உள்ள திறந்த வெளி அரங்கின் மேடையை (Stage) மூடுவதற்கான வேலைக்கு அங்கீகரிக்கப்பட்ட காண்ட்ராக்டர்களிடமிருந்து முத்திரையிட்ட டெண்டர்கள் தமிழ்நாடு செங்கல்பட்டு மாவட்டம், கல்பாக்கம்—603102, பொது சேவை நிறுவன, இயக்குனர் அவர்களால் 1984 அக்டோபர் 11ம் தேதியன்று பிற்பகல் 4 மணி வரை பெற்றுக் கொள்ளப்பட்டு அதேதினம் மாலை 4.05 மணிக்கு நேரில் ஆஜராகியுள்ள டெண்டர்தாரர்கள் முன்னிலையில் திறக்கப்படும். டேவணித் தொகை டெபாசிட் ரூ 1575- மேற்படி வேலையின் உத்தேச மதிப்பீட்டுச் செலவு ரூ 63,000- செக்யூரிட்டி டெபாஸிட் 6,300- டெண்டர் பத்திரத்தின் விலை ரூ 20-00 + விற்பனை வரி ரூ 1- முடிக்கப்படவேண்டிய காலம் 6 மாதங்கள் டெண்டர் பத்திரங்கள் எழுத்து மூலமான வேண்டுகோளின் பேரில் 1984 செப்டம்பர் 24 முதல் அக்டோபர் 10ம் தேதிக்குள் ரொக்கமாக அல்லது மணியார்டர்மூலம் (திருப்பியளிக்கப்படமாட்டாது) கல்பாக்கம் G. S. O. அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். டெண்டருடன் கீழ் காண்பவைகள் இணைத்து அனுப்பப்படாமல் இருப்பின் அவை முழுவதுமாக நிராகரிக்கப்படும்

(a) மேலேகுறிப்பிட்டவாறு கல்பாக்கம் G. S. O. வின் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் அவர்கள் சார்பில் டேவணித் தொகைக்கான டிபாஸிட் அழைப்பு ரசீதோ அல்லது ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவினால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு ஷெட்யூல் வங்கியில் பெறப்பட்ட டிமாண்ட் டிராப்ட் அல்லது ஷெட்யூல் வங்கியிலிருந்து பெற்ற ஒரு கியாரண்டி பாண்ட் (அரசு அங்கீகாரம் பெற்றது) குறைந்த பட்சம் ஆறு மாத காலம் செல்லுபடியாகக் கூடியது இணைத்து அனுப்ப வேண்டும்.

குறிப்பு: டேவணித்தொகை டெபாஸிட்டிற்காக காசோலைகள் மற்றும் ரொக்கம் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது

b) பொதுப் பணித்துறை, மத்தியபொதுப்பணித்துறை மின்சார இலாகா ஆகியவற்றின் அங்கீகரிக்கப்பட்ட பட்டியலில் உள்ள ஒப்பந்தக்காரர்கள், தாங்கள் சார்ந்துள்ள தகுதி வாய்ந்த வகுப்பின் சான்றுகளையும். c) சமீபத்தில் பெற்ற அங்கீகரிக்கப்பட்ட வருமான வரி கிளியரன்ஸ் சர்டிபிகேட்டையும் இணைத்து அனுப்ப வேண்டும். எவ்வித காரணமும் காட்டாமல் எந்த ஒரு டெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே நிராகரிக்கவும் அல்லதுமேற்படி வேலையின் பகுதிகளை ஒதுக்கீடு செய்யவும் பூரண உரிமையுண்டு

இயக்குனா, G.So

davp 345 (175) 84

---

தலைமைக்கழக அறிக்கை எண் 150 - 84

### திருச்சி மாவட்டம் லால்குடி நகர- ஜெயங்கொண்டம் ஒன்றிய கழகத் தோழர்களுக்கு...

கழகத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்டிருந்த லால்குடி நகரைச் சேர்ந்த
திரு. எஸ் டி. சண்முகம்
ஜெயங்கொண்டம் ஒன்றியத்தைச் சேர்ந்த
திரு. வி. கருணாமூர்த்தி
(முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்)

ஆகியோர் தங்கள் செயலுக்கு வருந்தி தங்களை மீண்டும் கழகத்தில் இணைத்துக் கொள்ளுமாறு நேரிலும், கடிதம் மூலமும் விடுத்த வேண்டுகோளினை ஏற்று அவர்கள் இன்று முதல் கழகத்தில் உறுப்பினர்களாக இணைந்து பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்கள்.

கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**சத்தியவாணிமுத்து**

சென்னை—14 அமைப்புச் செயலாளர்
20-9-84 அனைத்திந்திய அண்ணா தி மு. கழகம்

---

# வரதட்சணை கொடுமை: நிச்சயதார்த்தம் நின்றது: மணப்பெண் தற்கொலை

திருச்சூர். செப். 20 — வரதட்சணைக் கொடுமை ஒரு இளம் பெண்ணின் உயிரை பலி வாங்கி விட்டது.

மணமகள் வீட்டாரிடம் இருந்து மணமகன் வீட்டார் வரதட்சணை என்ற பெயரில் பெரும் தொகை கேட்கும் கெட்ட பழக்கம் இருந்துவருகிறது.

இந்தக் கொடுமை திருச்சூரில் ஒரு சோகக் கதையாக உருவாகி விட்டது.

திருச்சூரில் 23 வயதுப் பெண் மல்லிகா மல்லிகாவுக்கு மணப் பேச்சு நடந்தது. மணமகன் தேர்வு ஆகி நிச்சய தாம்பூலத்திற்கும் நாள் நிச்சயிக்கப்பட்டது.

நிச்சயதார்த்த நாளன்று மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாரிடம் ஒரு பெருந் தொகையை வரதட்சணையாக கேட்டனர்.

இந்தபெருந்தொகையை அவர்கள் கேட்டபோது மணமகள் வீட்டார் திகைத்தனர்

தங்களது இயலாத நிலையால் பேச வழியின்றி தலைகுனிந்து இருந்தனர்.

கேட்ட வரதட்சணைக்கு மணப்பெண் வீட்டார் சம்மதிக்காததால் மணமகன் வீட்டார் நிச்சய தாம்பூலத்தை ரத்து செய்தனர்.

நிச்சய தாம்பூலம் ரத்தாகி திருமணமும் நின்று விட்டதால் மணப்பெண் மல்லிகா மனமுடைந்து விட்டாள்.

மனமுடைந்த மல்லிகா கிணற்றில் குதித்து தனது உயிரை மாய்த்துக் கொண்டு விட்டாள்.

## நெல்லிக்குப்பம் : அண்ணா பவள விழா கூட்டம்

தென் ஆற்காடு எம். ஜி. ஆர். இளைஞர் அணித் துணைத்தலைவர் காசிநாதன் தலைமையில் தென் ஆற்காடு மாவட்டம் அண்ணா கிராமம் ஏனாதிமங்கலம், காவனூர். திருத்துறையூர். சின்னபேட்டை, புதுப்பேட்டை நெல்லிக்குப்பம் உள்ளிட்ட 100க்கு மேற்பட்ட இடங்களில் அண்ணா பவளவிழாவை யொட்டி கழக கொடி ஏற்றுவிக்கப்பட்டது.

நிகழ்ச்சியில் சாரங்கபாணி பன்னீர் செல்வம் ஜானகிராமன் தங்கராசு அமீது சிவராஜ் உள்ளிட்ட பல கழகத் தோழர்கள் பங்கேற்றனர்.

## விருத்தாசலம்

தந்தை பெரியார் போக்குவரத்து கழக அண்ணா தொழிலாளர் சங்கத்தின் விருத்தாசலம் பணிமனையின் நடத்துனர் செயலாளர் டி. தங்கவேலு. மத்திய சங்க இணைச் செயலாளர் அ. பாபநாசம் ஆகியோர் மறுப்பு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

எதிரொலி, தினகரன், மாலைமுரசு ஆகிய பத்திரிகைகளில் 6ந் தேதியன்று விருத்தாசலம், பாபநாசம், தங்கவேல் ஆகியோர் சோமசுந்தரம் கட்சியில் இணைந்துவிட்டதாகச் செய்தி வந்துள்ளது.

இந்தச் செய்தி எங்களுக்குத் தெரியாமல் வேண்டுமென்றே எங்களை பழி வாங்கும் நோக்குடன், புரட்சித் தலைவர் மீது நாங்கள் வைத்திருக்கின்ற நீங்காத பாசத்தை அழிக்கவேண்டுமென்றும், தொழிலாளர்கள், பொதுமக்கள் ஆகியோருடைய தொடர்பை துண்டிக்கவும் கருதி பொய்ச் செய்தி வெளியிட்டுள்ளார்கள்.

மேலும் நாங்கள் யார் எந்த வழியில் சென்றாலும் என்றும் எங்கள் இதய தெய்வம் புரட்சித் தலைவர் தலைமையின் கீழ்தான் இயங்குவோம். இயங்குகிறோம் என்பதையும் இதன் மூலம் உறுதிப் படுத்துகிறோம்.

பொய்செய்தி வெளியிட்ட ஏடுகள் மீது நடவடிக்கை மேற்கொள்ள இருக்கிறோம்.

இவ்வாறு பாபநாசம், தங்கவேல் ஆகியோர் கூறியுள்ளனர்.

# வாரி வழங்கும் பிறவி வள்ளல் புரட்சித்தலைவர்

## துப்புரவு ஆய்வாளர்கள் பாராட்டு

**சென்னை. செப். 20 வாரி வழங்க வேண்டும் என்ற எண்ணம் பிறவியிலேயே அமையப் பெற்றவர் புரட்சித்தலைவர் என்று துப்புரவு ஆய்வாளர் சங்கம் பாராட்டியுள்ளது**

சென்னை மாநகராட்சி துப்புரவு ஆய்வாளர்சங்க பொதுச்செயலாளர் கே. திவாகரன் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:-

வாரி வழங்க வேண்டும் என்று எண்ணம் பிறவியிலேயே அமையப்பட்டவர் என்பதை நிரூபிக்கும் வகையில் அரசு ஊழியர்கட்கு வாரி வாரி வழங்கி வரும் வள்ளல் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தற்போது அரசு ஊழியர்கட்கு முன் தேதியிட்டு அளித்த நான்கு அகவிலைப் படியை அறிந்து அரசு ஊழியர்கள் அனைவரும் அகமகிழ்வதை போன்று சென்னை மாநகரத்தை பல சிரமங்கட்குட்பட்டு தூய்மைப் படுத்துகின்ற பணியில் அர்பணித்துகொண்டுள்ள துப்புரவு ஆய்வாளர்களாகிய நாங்கள் தமிழக முதல்வரை அகமகிழ உள்ளங்குளிர பாராட்டுகிறோம்.

எங்கள் நன்றியை, காணிக்கை ஆக்குகின்றோம்.

எந்த ஆட்சிகாலத்திலும் ஏழு ஆண்டுகட்குள் அறிவிக்காத ஊதியக் குழுவை தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் காலத்தில் அமைத்ததை எண்ணி நாங்கள் அகமகிழ்ந்து எங்கள் பாராட்டுதல்களை தமிழகமுதல்வருக்கு அனுப்பினோம்.

இவ்வாறு அந்த அறிக்கையில் திவாகரன் குறிப்பிட்டுள்ளார்.

## காஸ் சிலிண்டர் வெடித்து கோர விபத்து

புதுடெல்லி, செப். 20— டெல்லியில் ஜும்மாமசூதி அருகே காலாமகால் பகுதியில் ஒரு வீட்டில் சமையல் காஸ்சிலிண்டர் வெடித்தது. இதனால்வீடு இடிந்து பயங்கர விபத்து ஏற்பட்டது. இதில் 15 வயது சிறுமி இறந்தாள். 10பேர்படுகாயம் அடைந்தனர்.

தலைமை மரத்தில் இருந்து தவறி விழுந்து உயிர் நீத்த மாணிக்கம் குடும்பத்தினருக்கு முதலமைச்சர் நிவாரண நிதியில் இருந்து ரூ 5 ஆயிரத்தை மாவட்டக்கலெக்டர் கற்பூரசுந்தரபாண்டியன் வழங்கினார்.

## தமிழகத்தில் அமுல்படுத்தப்படும்

# சத்துணவுத் திட்டம்: கேரள அமைச்சர் ஜேக்கப் பாராட்டு

**சென்னை, செப். 20 தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கியுள்ள "முதலமைச்சரின் சத்துணவு திட்டம்" மிகவும் சிறந்த திட்டமாகும் என்று கேரள கல்வி அமைச்சர் ஜேக்கப் பாராட்டினார்.**

கேரள கல்வி அமைச்சர் ஜேக்கப் தனது மனைவியுடன் சென்னை வந்தார்.

அவரை பத்திரிகை நிருபர்கள் சந்தித்து பேசினர். அப்போது அவர் கூறியதாவது:-

கேரளாவில் தமிழர்கள் அதிகம் வாழும் பகுதிகளான மூணாறு, வயனாடு, போன்ற பகுதிகளில் தமிழ் பயிற்சி மொழி பள்ளி கூடங்கள் இருக்கின்றன. புனலூரில் மட்டும் 5 தமிழ் வகுப்பு பள்ளிகள் இருக்கின்றன.

இது போல பள்ளிக் கூடங்களில் மாணவர்கள் தங்கள் விருப்பம் போல, தமிழ் கன்னடம் போன்ற மொழிகளை படிக்கவும் வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன.

கேரளாவில் தமிழர்களும் கேரளத்தவர்களும் மிகவும் நட்புடன் பழகி வருகின்றனர்.

தமிழக முதல்வர் நிறைவேற்றிவரும் சத்துணவுத் திட்டம் மிக சிறந்த திட்டமாகும்.

ஆனால் கேரளாவில் இந்த திட்டத்தை நிறைவேற்ற முடியாது. ஏனெனில் அங்கு அதிகம் செலவாகும் கேரளாவில் 'கேர்' நிறுவனத்தின் உதவியோடு உணவு போடப்படுகிறது.

கேரள மாநிலத்தின் வருமானத்தில் 41 சதவீதம் கல்விக்காக செலவிடப்படுகிறது.

எங்கள் மாநிலத்தில் 72 சதவீதம் பேர் படித்தவர்கள். இன்னும் 2 ஆண்டுகளில் அனைவருமே கல்வி அறிவு பெறும் வகையில் திட்டம் தீட்டி வருகிறோம்.

இவ்வாறு அவர் நிருபர்களிடம் கூறினார்.

தமிழ்மொழியை தானாகவே ஆர்வத்துடன் கற்றுக் கொண்டதாக அவர் கூறினார்.

# அண்ணா பவளவிழா பொதுக் கூட்டங்கள்

பேரறிஞர் அண்ணாவின் பவள விழா கழகத்தின் சார்பில் எழுச்சியோடு தமிழகம் முழுவதும் கொண்டாடப்பட்டு வருகிறது.

விவரம் வருமாறு:-

## ஆலந்தூர்

ஆலந்தூர் கழகசார்பில் அண்ணா பவள விழா நேற்று (19-ந் தேதி) கொண்டாடப்பட்டது. சுகுமார் தலைமையில் தாம்பரம் லட்சுமிமுத்து, அப்துல்ரசாக் எம்.எல்.ஏ. ஆலந்தூர் எஸ். பாலன், ஜி.பி. லெனின் ஆகியோர் பேசினர்.

ஆலந்தூர்மோகன் நன்றி கூறினார்

## பிலிமிசை

திருச்சி மாவட்டம் ஆலந்தூர் ஒன்றியம் பிலிமிசையில் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டம் வரும் 27ந் தேதி நடைபெறுகிறது மாவட்ட இணைச் செயலாளர் நல்லுசாமி பங்கேற்று கழக கொடியினை ஏற்றுவிக்கிறார். என். பெருமாள் எம்.எல்.ஏ. அண்ணா உருவப் படத்தை திறக்க ஏ. இளவரசன் இனிப்பு வழங்குகிறார். அ. பழனிமுத்து தலைமையிலும், சின்னையன் வரவேற்பிலும், பெரியசாமி முன்னிலையிலும் இந்த நிகழ்ச்சி நடைபெறுகிறது

## திருஇந்தளூர்

தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறை திருஇந்தளூர் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டம் வரும் 25ந் தேதி மாலை நடைபெறுகிறது.

பி. எஸ். சேகர் தலைமையிலும், எம். கிருஷ்ணமூர்த்தி சேதுராமன் முன்னிலையிலும், ஜி. ராமமூர்த்தி மோகன் வரவேற்பிலும் நடைபெறும் இந்த கூட்டத்தில் தம்பி சிவம் அன்புக்கண்ணன் ராமகிருஷ்ணன், பாலவேலாயுதம், ராஜாராமன் மற்றும் பலர் பங்கேற்று பேசுகின்றனர். சேகர் நன்றி கூறுகிறார்.

## பாளை ஒன்றியம் அயன் கழுகனேரியில்

திருநெல்வேலி மாவட்டம் பாளை ஒன்றியம் அயன் கழுகனேரி கழகக் கிளை சார்பில் அண்ணா பவளவிழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. எஸ். சுப்பையா பாண்டியன் தலைமையிலும், ஏ. மாணிக்கம் முன்னிலை யிலும் நடந்த இந்நிகழ்ச்சியில் எஸ். வேலாயுதப்பிள்ளை கழகக்கொடி ஏற்றுவிக்க ஏ ஆறுமுகம் நன்றி கூறினார். நிகழ்ச்சியில் 100 பேருக்கு சர்க்கரை பொங்கல் வழங்கப்

## செவ்வாய்பேட்டை

குருவரெட்டியூர் ஒன்றியம் சார்பில் செவ்வாய்பட்டை கிராமத்தில் அண்ணா பவளவிழா மிகச்சிறப்பாக ஒன்றிய பொருளாளர் இ. மனோகரன் தலைமையில் செவ்வாய்பேட்டை ஜெய்பால் முன்னிலையில் நடைபெற்றது. ஒன்றிய செயலாளர் ராதா கழக கொடியேற்றி இனிப்புகள் கொடுத்தார்.

பிறகு ஏழைக் குழந்தைகளுக்கு மதிய உணவு அளித்தார்கள். முருகேசன் நன்றி கூறினார்.

## குடியேற்றம் ஒன்றியம்

குடியேற்றம் ஒன்றியத்தில் கொண்ட சமுத்திரம், இந்திராநகர், பொன்னம்பட்டி. நேருஜி நகர். விநாயகபுரம், காந்திநகர் ஆகிய இடங்களில் அண்ணாபவள விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. அக்பர், தியாகராசன், பிரபாகர், மார்க்கபந்து, ஏ. ஆர் ராமலிங்கம் ஜெயராமன், அன்பு ஆகியோர் பங்கேற்று கழகக் கொடியை ஏற்றுவித்தனர்

அண்ணாபவளவிழாவை யொட்டி கழகத் தோழர்கள் சைக்கிள் ஊர்வலமும் நடைபெற்றது. விநாயகம் ஆனந்தன் முனிரத்தினம் நடேசன் ஜெகதீசன் உள்ளிட்ட பல கழகத் தோழர்கள் இதில் பங்கேற்றனர்.

## அரூர்

தருமபுரி மாவட்டம் அரூர் ஒன்றியம் அரூர் டவுன் 1-வது கிளையில் அண்ணா பவள விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது விழாவையொட்டி அரசு மருத்துவமனையிலுள்ள நோயாளிகளுக்கு இனிப்பு, பழவகைகள் வழங்கப்பட்டன

இந்நிகழ்ச்சிக்கு பூபதி ராசன் தலைமை வகிக்க, பாரதி முன்னிலை வகித்தார்.

முன்னாள் எம்.எல்.ஏ ஆறுமுகம் பழங்களை வழங்கினார், கழககொடி ஏற்று விழா நிகழ்ச்சியும் நடைபெற்றது. அன்வர் பாஷா நிகழ்ச்சிக்குத் தலைமை வகிக்க எம், சி. சேகர் கழக கொடி ஏற்றுவித்தார். அ கோ. செல்வராஜ் இனிப்பு வழங்கினார்.

நிகழ்ச்சியில் வெள்ளை முருகன், சபாபதி எம் எல் ஏ, ஆர். முத்து, தண்டாயுதம் ராஜேந்திரன் மணிசேகரன் சின்னதுரை, கோவிந்தசாமி மற்றும் பலர் பங்கேற்றனர்.

## திட்டக்குடி

திட்டக்குடியில் அண்ணா பவள விழா மங்களூர் ஒன்றியச் செயலாளர் பழனிமுத்து தலைமையில் நடைபெற்றது. கழக தோழர்கள் ஊர்வலமாக வந்தனர். பேருந்துநிலையம் அருகே கழகக்கொடி ஏற்றுவிக்கப்பட்டது. நகரச் செயலாளர் அண்ணாசிலைக்கு மாலையணிவித்தார்.

## நெய்வேலி

நெய்வேலி புதுநகர் வட்டத்திலுள்ள அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தும் இனிப்புகள் வழங்கியும் அண்ணா பவளவிழாவை கழகத் தோழர்கள் கொண்டாடினர். தங்கராசு எம்.எல்.ஏ. 50க்கும் மேற்பட்ட இடங்களில் கழகக் கொடியை ஏற்றுவித்தார்.

நிகழ்ச்சியில் எஸ். சுப்பிரமணியம், இரா. கரிகாலன், முகமது அனீபா, சிவசண்முகம், ராமகிருஷ்ணன். மாடசாமி, கலியன், தேவநாதன் மற்றும் பலர் பங்கேற்றனர். பாலசுப்பிரமணியன் நன்றிகூறினார்.

## ஈரோடு

ஈரோடு ஒன்றியத்தில் அண்ணாபவளவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மாநில மகளிர்பிரிவு செயலாளர் பா. வளர்மதி பங்கேற்று பல இடங்களில் கழக கொடியேற்றி வைத்தார். ஈரோடு பெரிய அக்ர ஹாரத்தில் நடைபெற்ற பிரமாண்டமான கூட்டத்திலும் பங்கேற்று வளர்மதி பேசினார். நாளை (21-ந் தேதி) கோடம்பாக்கம் குமார் பங்கேற்று சித்தோட்டில் நடைபெறும் அண்ணா பவள விழா கூட்டத்தில் பேசுகிறார்.

## திருத்துறைப்பூண்டி

திருத்துறைப்பூண்டியில் அண்ணா பவள விழா கடந்த 15 ந் தேதி மணலி க. சிதம்பரநாத் தலைமையில் நடைபெற்றது.

கழகாம். எல்.ஏ எம். எஸ் மாணிக்கம் மணலி, தண்டலச்சேரி. வேளூர், கீழ்வேளூர், கீரக்களூர், விளக்குடி ஆகிய இடங்களில் கழக கொடியை ஏற்றுவித்தார். நிகழ்ச்சியில் ஜெயராமன், குணாளன், பாஸ்கரன், எம். எஸ் மணி கோவை நடராசன் ஆகியோர் பங்கேற்றனர்.

## கோவில்பாளையம்

சென்னிமலை ஒன்றியம் முகாசி கோவில்பாளையத்தில் நடந்த 16ந் தேதி அண்ணாபவள விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. நிகழ்ச்சிக்கு சுப்பிரமணியம் தலைமை வகிக்க கிருஷ்ணசாமி எம். எல். ஏ. பங்கேற்று கழக கொடி ஏற்றுவித்து பேசினார்.

## ஏல விற்பனை

1. Nemichand Manakchand Jain, 43 கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-17 ஏற்கெனவே அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 7-6-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 22-9-84 அன்று காலை 10 மணிக்கு 2. S. Indermal, Jain. 90. L. B. Road Adayar MS-20 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 14-9-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 12-10-84 அன்று காலை 10 மணிக்கு 3. K. Bhansilal, 20, பெருமாள்நாயக்கன் தெரு. சென்னை-7 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 27-8-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 12-10-84 அன்று பகல் 2 மணிக்கு 4. P Jayanthilal, 35, மாதவரம் நெடுஞ்சாலை, பெரம்பூர், சென்னை-11. அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 17-9-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 15—10—84 அன்று காலை 10 மணிக்கு 5. J. Pukhraj Sowcar 35, மாதவரம் நெடுஞ்சாலை பெரம்பூர், சென்னை-11 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 17-9-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 15-10-84 அன்று காலை 11 மணிக்கு 6. Pukaraj Salesa & Sons, 35 A, மாதவரம் நெடுஞ்சாலை, பெரம்பூர்சென்னை-11 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 17-9-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 15-10-84 அன்று பகல் 12 மணிக்கு 7. M. Sampathraj Kothari, ஏகாம்பரம் சாலை, ராயபுரம், சென்னை-13 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 12-9-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 12-10-84 அன்று பகல் 11 மணிக்கு 8. J. Ratanlal, 48, வன்னியர் தெரு, சென்னை-94 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 7-6-84 மாற்றப்பட்ட ஏலத்தேதி 22-9-84 அன்று பகல் 2 மணிக்கு

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன். பொன அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கிகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரம்சந்த் ஜெயின் 150 சாமிநாதன் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேலே குறிப்பிட்ட ஏலத தேதிகளில் ஏலம்போடுவார்.

## அகவிலைப்படி உயர்வு:

# புரட்சித்தலைவருக்கு ஊழியர் சங்கங்கள் நன்றி - பாராட்டு

**சென்னை, செப், 20. இந்தியாவிலேயே தமிழ்நாடு அரசு தான் முதன்முதலாக மத்திய அரசின் அறிவிப்பைத் தொடர்ந்து தனது ஊழியர்களுக்கு அகவிலைப்படி உயர்வை அளித்துள்ளது அதற்காக முதல்வர் புரட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்வதாக தமிழ்நாடு அரசு அலுவலர் ஒன்றிய தலைவர் சிவ. இளங்கோ குறிப்பிட்டுள்ளார்.**

ஓர் அறிக்கையில் சிவ. இளங்கோ கூறியிருப்பதாவது:

தமிழ்நாடு அரசு அலுவலர்கள்-ஆசிரியர்கள்-மற்றும் உள்ளாட்சி நிறுவன ஊழியர்கள் 8 லட்சம் பேருக்கும் 4 தவணை அகவிலைப்படி உயர்வுகளை வழங்கிட ஆணை பிறப்பித்துள்ள தமிழக முதல்வருக்கு தமிழ்நாடு அரசுஅலுவலர் ஒன்றியத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்,

விலைவாசி உயர்வுக்கு ஏற்றபடிதான் அகவிலைப்படி வழங்கப்படுகிறது என்றாலும் மத்திய அரசின் அறிவிப்பையும் ஆணையையும் பின்பற்றியே இந்த அகவிலைப்படி உயர்வுகள் வழங்கப்படுகிறது,

இம்முறை இந்தியாவில் உள்ள 22 மாநில அரசுகளில் தமிழ்நாடு அரசு தான் முதன் முதலாக மத்திய அரசு அறிவிப்பைப் பின்தொடர்ந்து தனது ஊழியர்களுக்கு அகவிலைப்படி உயர்வுகளை அறிவித்துள்ளது என்பது மகிழ்ச்சி தரக்கூடிய ஒன்றாகும்.

அரசு அலுவலர்களின் மாநாட்டில் கலந்து கொண்ட பிறகு முதல்வர் இவ்வளவு விரைவில் அறிவித்துத் தீபாவளிக்கு முன்னால் 8 மாத பாக்கியையும் ஒரு கனிசமான தொகையாகக் கிடைக்க வழி வகை செய்தமைக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். இவ்வாறு அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்

தமிழக அரசு - அரசு பணியாளர்களுக்கு 4 தவணைபஞ்சப்படிஉயர்வு அளித்ததை வரவேற்பதாக தமிழ்நாடு அரசுப் பணியாளர் சங்கம் சார்பில் அதன் பொதுச் செயலாளர் பி. எஸ். சௌந்தர பாண்டியன் ஓர் அறிக்கையில் கூறியுள்ளார்

## கருணை உள்ளம்

தமிழ்நாடு அரசுப் பணியாளர்களுக்கு அகவிலைப் படிகளை முன்தேதியிட்டு அறிவித்த தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவருக்கு சங்கத்தின் சார்பில் மனமார்ந்த நன்றியினை காணிக்கையாக்குகிறேன்.

கருணையுள்ளம் கொண்ட முதல்வர் தொழில் வரி ரத்து, போனஸ் போன்ற மற்ற கோரிக்கைகள் மீதும் விரைவில் தீர்வுகாண வேண்டுகிறோம என்று தமிழ்நாடு அரசு தொழிலாளர்துறை பணியாளர்கள் சங்க தலைவர் கே. டி. ராஜன் கூறியுள்ளார்.

அரசு அலுவலர், ஆசிரியருக்கு பேரறிஞர் அண்ணா பவள விழாவன்று முதல்வர் புரட்சித் தலைவர் முன்தேதியிட்டு மே, ஜூன். ஆகஸ்டு, அக்டோபர் ஆகிய மாதங்களில் நான்கு அகவிலைப்படி உயர்வுகளை அளித்திருப்பதுகுறித்து ஆசிரியவர்கள் பெரிதும்மகிழ்ச்சி அடைந்துள்ளனர். ஆசிரியர்களின் காவலர் என்னும் சிறப்பான பேற்றினை புரட்சித் தலைவர் அடைந்துள்ளார்.

முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவருக்கும் தமிழக அமைச்சரவைக்கும் அனைத்திந்திய ஆசிரியர் பேரவையின் சார்பில் அதன் மாநில இணைப் பொதுச் செயலாளர் வி. குருதயராசன் ஓர் அறிக்கையில் நன்றி தெரிவித்துள்ளார்.

எவ்விதப் போராட்டமோ கோரிக்கைகளோ இன்றி பால் நினைந்தூட்டும்தாய்போல, பேரறிஞர் அண்ணா பவள விழா நினைவுப்பரிசாக 1-5-84. 1-6-84, 1-8-84 1-10-84 ஆகியநாட்களமுதல்ஒட்டு மொத்தமாக நான்கு அகவிலைப்படிகளைவழங்கிய முதல்வர் புரட்சித் தலைவர் அரசுக்கு அனைத்து இந்திய ஆசிரியர் பேரவையின் மதுரை மாவட்ட சார்பில் மாவட்டச் செயலாளர் சி இ அமல்ராஜ் மனம்நிறைந்த நன்றியினையும் பாராட்டுதல்களையும் மகிழ்ச்சி

8-ம் பக்கம் பார்க்க

## தமிழ் இலக்கிய சேவை

# முன்னாள் நீதிபதி இஸ்மாயிலுக்கு ரூ 20 ஆயிரம் பரிசு

## எம். ஏ. சிதம்பரம் அறக்கட்டளை சார்பில் வழங்கப்படுகிறது

**சென்னை, செப். 20. தமிழ் இலக்கியத் திற்கு தொடர்ந்து சேவை செய்துவரும் முன்னாள் நீதிபதி எம். எம். இஸ்மாயிலுக்கு எம். ஏ. சிதம்பரம் அறக்கட்டளை ரூ. 20 ஆயிரம் பரிசு வழங்குகிறது.**

சிறந்த ஆராய்ச்சி புத்தகங்களை எழுதுகிற தமிழ் அறிஞர்களுக்கு எம். ஏ. சிதம்பரம் அறக்கட்டளை ஆண்டுதோறும் டாக்டர் ராஜாசர் அண்ணாமலை செட்டியார் விருது வழங்கி வருகிறது.

1984-ஆம் ஆண்டுக்குரிய பரிசு தஞ்சை பல்கலைக் கழக நாடகத் துறை இணைப் பேராசிரியர் டாக்டர் எம். ராமசாமிக்கு கிடைத்துள்ளது.

டாக்டர் எம். ராமசாமிக்கு வயது 33 இவர் எழுதிய "தோற்பாவை நிழற்கூத்து" என்ற ஆராய்ச்சி கட்டுரை புத்தகத்திற்கு இந்த பரிசு வழங்கப்படுகிறது

ராஜாசர் அண்ணாமலை செட்டியார் விருது வழங்கும் விழா 10வது ஆண்டையொட்டி முன்னாள் நீதிபதி எம். எம். இஸ்மாயிலுக்கு சிறப்பு பரிசு வழங்கப்படுகிறது.

அவருடைய தமிழ் இலக்கிய சேவைக்காக இப்பரிசு அவருக்கு அளிக்கப்படுகிறது,

விருது வழங்கும் விழா இம்மாதம் 30-ந் தேதி சென்னை அண்ணாமலை மன்றத்தில் நடைபெறுகிறது.

விழாவில் டாக்டர் எம். ராமசாமி, முன்னாள் நீதிபதி எம். எம. இஸ்மாயில் ஆகியோருக்கு தலா ரூ. 20 ஆயிரம் வழங்கி பொன்னாடைப்போர்த்தப்படும்.

இந்த பரிசை மத்திய மந்திரி சிவசங்கர் வழங்குகிறார்.

## 4-ம் பக்கம் தொடர்ச்சி

யுடன் சமர்ப்பித்துக் கொள்வதாக அறிக்கையொன்றில் தெரிவித்திருக்கிறார்.

பேரறிஞர் "அண்ணா" பவளவிழாவின் போது கொடைஉள்ளம்படைத்த பொன்மனச் செம்மல் தமிழக முதல்வர் அரசு ஊழியர்களுக்கு நான்கு தவணை ஊதிய உயர்வையும் நிலுவைத் தொகையையும் வழங்க ஆணைப் பிறப்பித்தமைக்கு அண்ணா பணியாளர்கள் சங்கத்தின் சார்பில் பாராட்டுகிறோம் என்று சங்க இணைப் பொதுச் செயலாளர் ஜெ. சாந்தியப்பன் ஓர் அறிக்கையில் கூறியுள்ளார்.

மத்திய அரசு 4 அகவிலைப்படியை அறிவித்தவுடன் யாரும் கேட்காமலே நாடு போற்றும் நல்லவர், சத்துணவு சரித்திர நாயகன், குழந்தையின் சிரிப்பில் தன் அன்னையைக் காணும் எமது இயக்க தெய்வம் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர், தமிழக அரசு ஊழியர் ஆசிரியர்களுக்கு தீபாவளிப் பரிசாக முன் தேதியிட்டு 4 அகவிலைப்படியை அறிவித்ததற்கு தமிழ்நாடு தொடக்கப்பள்ளிஆசிரியர் இணைப்பு இயக்க தலைமை கழகச் சார்பில் பாராட்டையும், நன்றி மலர்களையும் காணிக்கையாக்குகிறோம். என்று தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்க தலைமைக் கழக செயலாளர் சேந்தை கு. கணேசன் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார்.

தமிழ்நாடு வீட்டுவசதி வாரிய ஊழியர்கள் சங்க மாநில பொதுச் செயலாளர் மோகன் விடுத்துள்ள அறிக்கையில் தமிழக அரசு அறிவித்துள்ள அகவிலைப்படி உயர்வினை வரவேற்றுள்ளார்.

ஊழியர்களின் நலனில் பெரும் அக்கறை கொண்ட முதல்வர் புரட்சித்தலைவருக்கு வீட்டு வசதி வாரிய ஊழியர்கள் தங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்ளுவதாகவும் மோகன் தெரிவித்துள்ளார்.

தமிழ்நாடு சட்டமன்றச் செயலக நிருபர்கள் சங்கத் தலைவர் பி. கே சாமிநாதன், செயலாளர் ஸ்ரீராமன் ஆகியோர் அரசுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டுள்ளனர்

தமிழ்நாடு மோட்டார் வாகன பராமரிப்புத்துறை அமைச்சுப் பணியாளர்கள் கழக செயலாளர் ம. சத்யம் விடுத்துள்ள அறிக்கையில் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொண்டுள்ளார்.

# கழக தோழர்கள் மீது கம்யூனிஸ்ட்டு தாக்கு

தருமபுரி, செப். 20— தருமபுரி மாவட்டம் பென்னாகரம் பகுதியில் மூங்கில் மடுவில் கடந்த 12ந் தேதியன்று கம்யூனிஸ்டுகள் கழக தோழர் முருகேசன், சுப்பிரமணி, சேகர், ஆறுமுகம் ஆகியோரை கொடுமையான முறையில் தாக்கியுள்ளனர். கம்யூனிஸ்டுகளின் தாக்குதலுக்கு ஆளாகிய கழகத் தோழர்கள் தருமபுரி அரசு மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர். கழகத் தோழர்களை தருமபுரி மணி, பென்னாகரம் ரகுநாதன், மாது, ராஜமாணிக்கம் ஆகியோர் சென்று ஆறுதல் கூறி நலம் விசாரித்தனர்.

## யுத்த தளவாட தொழிற்சாலை

திருச்சிராப்பள்ளி 620016

### தொழில் பயிற்சியாளர்

யுத்த தளவாட தொழிற்சாலை திருச்சிராப்பள்ளி 620016 ல் தொழிற்பயிற்சி பெற திருமணமாகாத விண்ணப்பதாரர்களிடமிருந்து அப்ளிகேஷன் வரவேற்கப்படுகின்றன. D.G.E.T. அவர்களுடன் கலந்து பேசி, தொழிற்சாலையின் வசதிக்கேற்பவும் புதுத்தொழில்கள் ஆரம்பிப்பதற்கு இணங்கவும் கீழ்க்கண்ட தொழில்களில் பயிற்சி கொடுக்கப்படும். பிட்டர் டர்னர், மிஷினிஸ்ட், கிரைண்டர், மில் ரைட் மெக்கானிக் மற்றும் எலக்ட்டிரானிக் மெக்கானிக். கல்வித் தகுதி விண்ணப்பதாரர் மெட்ரிகுலேஷன்- எஸ்.எஸ்.எல்.சி. அல்லது அதற்கு சமமான தேர்வில் கணக்கு ஒரு பாடமாகக் கொண்டு கணக்கில் குறைந்தது 40 சதவிகித மார்க்குகள் பெற்று மற்றும் மொத்தத்தில் 45 சதவிகித மார்க்கு பெற்று பாஸ் பண்ணியிருக்கவேண்டும். நிர்ணயிக்கப்பட்ட கல்வித் தகுதி குறைந்த அளவே. எனவே இத்தகுதி மட்டும் பெற்றிருப்பவர்கள் எழுத்து மூலம் உள்ள தேர்வு- நேர்முகத்தேர்வுக்குஅழைக்க தகுதி உள்ளவர்களாகக்கருதப்படமாட்டார்கள். விளம்பரத்தைவரவேற்று அதிகமான விண்ணப்பங்கள் வந்தாலும் மற்றும் OF போர்டு- தொழிற்சாலைகளுக்கு எல்லா தகுதி உள்ள விண்ணப்பதாரர்களையும் எழுத்து தேர்வு- நேர்முகத் தேர்வுக்கு அழைக்க வசதியில்லாது அல்லது முடியாதிருந்தாலும் OF போர்டு- தொழிற்சாலை ஜெனரல் மானேஜர் விளம்பரத்தில் நிர்ணயிக்கப்பட்ட கல்வித் தகுதிக்கு மேற்பட்ட கல்வித்தகுதி மற்றும் அல்லது அனுபவம் அடிப்படையில (எழுத்துத் தேர்வு) நேர்முகத்தேர்வுக்கு குறைத்து அழைப்பார்கள்.

உடல்தகுதி:- மனஉறுதி மற்றும் உடல் உறுதி மற்றும் எவ்வித உடல் ஊனமும இலலாதவராக இருக்க வேண்டும். வயது 18-3-85ல் 14 முதல் 19 வருடங்கள் உச்ச வயது தளர்த்தப்படக் கூடியது 1, ஷெடியூல்ட ஜாதியினர்- மலைஜாதி விண்ணப்பதாரர்களுக்கு 5 வருடங்கள் தளர்த்தப்படும். 2. I.T.I, I.T.C. பாஸ் பண்ணிய விண்ணப்பதாரர்களுக்கு சம்பந்தப்பட்ட தொழில்களில I.T.I.-I.T.C. யில் இருந்தபயிற்சிகாலம் தளரத்தப்படும்.

பயிற்சி காலம்:- 4 வருடங்கள் அல்லது 1961 அப்ரெண்டைஸ் ஆக்டில் சில தொழில்களுக்குகுறிப்பிட்டுள்ள காலம்.

உதவித் தொகை:- முதல் வருட பயிற்சி காலத்தில் மாதம் ரூ 230-2-ம் வருட பயிற்சி காலத்தில் மாதம் ரூ 260 3-ம் வருடம் மாதம் ரூ 300 மற்றும் 4-ம் வருடத்தில் மாதம் ரூ 350 பயிற்சி காலம் முழுவதிலும் வேறு எந்த அலவன்சும் கொடுக்கப்படமாட்டாது. எனினும் மாஜி ITI-ITC விண்ணப்பதாரர்களை பொறுத்த மட்டில அவர்கள் பயிற்சி பெற்ற காலம் உதவித் தொகை வழங்குவதற்கு கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும்.

சில பதவிகள் ஷெட்யூல்டு வகுப்பினர்- மலைஜாதி விண்ணப்பதாரர்களுக்கு ஒதுக்கப்பட்டு உள்ளன. தகுதி உள்ள விண்ணப்பதாரர்கள் கிடைக்காவிட்டால் இந்த இடங்கள் ஒதுக்கப்படா தலைகளாகக் கருதப்படும....

தேர்வு:- தேர்வு இந்த அடிப்படையில் இருக்கும். எ) எழுத்துத் தேர்வு நடைபெறும். ஆங்கிலம், கணக்கு, விஞ்ஞானம், மற்றும் படம் வரைதலில் திறமையைத் தெரிந்துகொள்ள தேர்வுக்குப்பின்னால் நாள் தெரிவிக்கப்படும். பி) நேர்முகத் தேர்வும், மெடிக்கல தேர்வும் யுத்த தளவாட தொழிற்சாலை திருச்சிராப்பள்ளியில் (தமிழ்நாடு) நடைபெறும் தேர்வு பெற்ற விண்ணப்பதாரர் ஒரு ஒப்பந்தம் எழுதி கொடுக்க வேண்டும். மைனராகின் கார்டியன் எழுதக் கொடுக்கவேண்டும தொழிற்சாலையில பயிற்சியாளர்களுக்கு எந்த வித தங்கும் வசதியும் வீடும் கொடுக்கப்படமாட்டாது. பயிற்சி காலத்தில் பயிற்சியாளர்களுக்கு இலவச மருத்துவ சிகிச்சை கொடுக்கப்படும்.

பயிற்சி கொடுக்கும் நிறுவனம் எந்த பயிற்சியாளர்களுக்கும் பயிற்சி முடிந்த பின் வேலை கொடுக்க வேண்டும என்பது கடமை அல்ல அதுபோல் பயிற்சி கொடுக்கும் தொழிற்சாலைஏதாவதுவேலைகொடுத்தால் அதைபயிற்சியாளர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற கட்மையும் இல்லை. விண்ணப்பதாரர்கள 1961 அப்பிரண்டைஸ் ஆக்டில் உள்ள சட்ட திட்டங்களை தெரிந்து வைத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொளளப்படுகிறார்கள்.

நிர்ணயிக்கப்பட்ட விண்ணப்பபாரம் கேட்டு எழுதும் விண்ணப்பத்துடன் உத்தேசமாக 25 செ மீ X 12 செ மீ அளவுள்ள ஒரு கவரில் தனது விலாசத்தை எழுதி ஸ்டாம்ப் ஒட்டாது அனுப்புவதுடன் கீழ் கண்ட விவரங்கள் கல்வித்தகுதி, பாடம்வாரி தேர்வில் பெற்ற மார்க்குகள் விவரம் பிறந்த தேதி அத்துடன் மேலே கூறியபடி வயது உச்சவரம்பு தளர்த்த வேண்டின எத்தனை வருடங்கள் என்ற விவரம் தெரிவித்து விண்ணப்பபாரம் ஜெனரல் மானேஜர் யுத்த தளவாட தொழிற்சாலை திருச்சிராப்பள்ளி 16 (தமிழ்நாடு) அவர்களிடம் இருந்து பெற்றுக் கொள்ளலாம். தபால் மூலம் விண்ணப்பபாரம் கேட்டு வரும் விண்ணப்பங்கள் 8-10-84க்குப் பின் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. அதன் பேரில் ஒரு பதிலும் கொடுக்கப்படமாட்டாது. பாரங்கள் 16-9-84 முதல் 8-10-84 வரை வழங்கப்படும்.

நிர்ணயிக்கப்பட்ட பாரம் பூர்த்தி செய்யப்பட்டு வேண்டிய இணைப்புகளுடன் அனுப்பப்படும் விண்ணப்பபாரம் ஜெனரல மானேஜா யுத்த தளவாட தொழிற்சாலை திருச்சிராப்பள்ளி-16 அவர்களுக்கு வந்து சேர வேண்டிய கடைசி நாள் 15-10-84 நிர்ணயிக்கப்பட்ட விண்ணப்பத்துடன் 2 பாஸ்போர்ட் சைஸ் (5 செ.மீ X 6 செ. மீ) போட்டோவும் மற்றும் யுத்த தளவாட தொழிற்சாலை எஸ்டேட் ஆபீசில் மாற்றக்கூடிய தாக ஜெனரல் மானேஜர் யுத்த தளவாட தொழிற்சாலை திருச்சிராப்பள்ளி-16 அவர்கள் பெயருக்கு ஒரு கிராஸ் போஸ்டல ஆர்டர் ரூ. 2. மலைஜாதி வகுப்பினர்- ஷெட்யூல வகுப்பினர்களுக்கு 0-50 பைசாவுக்கு எடுத்து அதையும இணைத்து அனுப்ப வேண்டும் பயிற்சி 18-3 85 முதல் தொடங்கப்படும்.

முழுவதும் நிரப்பாத விண்ணப்பம் - தவணை நாளுக்குப்பின் வரும் விண்ணப்பங்கள் தள்ளுபடி செய்யபடும். எவ்வித கடிதப் போக்குவரத்தும் அதன பேரில ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

டி.ஏ.வி.பி. 685 (366) 84

Edited and Published by R. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.

சென்னை சங்கைமாவட்ட

# அண்ணா சலவையாளர் மாநாடு

சென்னை, செப். 20- சென்னை-செங்கை மாவட்ட அண்ணா தொழிற் சங்க சலவைத் தொழிலாளர் மாநாடு அடுத்த மாதம் (அக்டோபர்)28ந் தேதி சென்னையில் நடைபெறுகிறது. அமைச்சர் பெருமக்கள், ஜேப்பியார் எம எல்.சி. மதுசூதனன் எம்.எல் சி உளளிட்ட பல கழக முன்னணியினர் பங்கேற்று பேசுகின்றனர். இந்த மாநாட்டிற்கு பொறுப்பாளராக கோலப்பா எம்.எல் சியும், வரவேற்புக்குழு தலைவராககஎம், எம்சாமியும், மற்றும் முனியாண்டி, மணையன். பாண்டியன் ஆகியோர் மாநாட்டு செயலாளர்களாகவும் செங்கையன, தட்சணாமூர்த்தி, பலராமன ஆகியோர் துணை தலைவர்களாகவும் இ. கருப்பையா பொருளாளராகவும் பணியாற்றுகிறார்கள்.

# கூட்டுறவு துறை மூலம் ஏழை மக்களுக்கு மேலும் நன்மைகள்

## அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் பேச்சு

மதுரை, செப் 20 கூட்டுறவத்துறை மூலம் ஏழை எளிய மக்களுக்கு என்னென்ன நன்மை செய்ய முடியுமோ அதை புரட்சித் தலைவரின ஆலோசனையுடன் செயல படுத்துவேன் என்று அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார்.

பேறிஞர் அண்ணா பவளவிழா மற்றும் 10-வது வகுப்புவரை மாணவ மாணவிகளுக்கு சத்துணவு வழங்கும் திட்டதொடக்க விழாவும் ராமநாதபுரம் மாவட்டம்திருப்பத்தூரில் நடந்தது.

இந்த விழாவுக்கு மாவட்ட ஆட்சித் தலைவர் குருமூர்த்தி தலைமை ஏற்றார். சட்டமன்ற உறுப்பினர்கள் சுந்தர்ராசன், பிச்சை, பாரமலை பாலகிருஷ்ணன், அருணகிரி, தவசி, சத்தியமூர்த்தி, சௌந்தர்ராசன் எம். பி. முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் பொ. அன்பழகன், நரேஷ் குப்தா. அலாவுதீன் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

கூட்டுறவுத் துறை அமைச்சர்சாத்தூர்ராமச்சந்திரன் தொடக்க உரையில் கூறியதாவது:-

மாணவர்கள் நன்றாக படிக்க வேண்டும். உங்கள் கையில் தான் எதிர்காலம் இருக்கிறது நீங்கள் எவ்வித கவலையுமின்றி நல்ல உணவு உண்ண வேண்டும் என்றுதான புரட்சித்தலைவர் சத்துணவு திட்டத்தை தொடங்கியுள்ளார் இன்று அந்த திட்டம் விரிவு படுத்தப்பட்டுள்ளது.

ஏழைகளின் கஷ்ட நஷ்டங்களை அறிந்தவர் புரட்சித்தலைவர் ஏழைகளின் நல்வாழ்வுக்காக ஒவ்வொரு திட்டமாக செயல்படுத்தி வருகிறார்.

ஏழை எளிய மக்களுக்கு கூட்டுறவுத்துறை மூலம் என்னென்ன செய்ய முடியுமோ அதைபுரட்சித் தலைவரின் ஆலோசனையுடன் செயல்படுத்துவேன்.

கூட்டுறவு என்பது ஏழை, பணக்காரர் ஆகிய இருவருக்கும் தேவையான ஒன்று. கூட்டுறவுத்துறை மூலம் கடன் பெற்றவர்கள் காலதாமதமின்றி வாங்கிய கடனை திருப்பி செலுத்த வேண்டும் அப்போது தான் மேலும் மேலும் நன்மைகள் கிடைக்கும்.

இவ்வாறு அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார்.

முன்னதாக அண்ணா சிலைக்குஅமைச்சர் மாலை அணிவித்தார் விழாவில் அண்ணா படத்தை திறந்து வைத்தார்.

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டத்தின் கீழ் 392 பேருக்கு 10 லட்சத்து 55 ஆயிரம் ரூபாய்க்கான கடன் தொகைகளையும், முதியோர் உதவித் தொகை மற்றும் வீட்டுமனை பட்டாக்களையும் அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் வழங்கினார்.

# தொழுநோயாளிகள் தொழில் துவங்க வங்கி கடன் உதவி

சென்னை, செப். 20- தொழு நோயாளிகளுக்கும் தொழு நோயால் பாதிக்கப்பட்டு குணம் அடைந்தவர்களுக்கும் தொழில் தொடங்க 5 ஆயிரம் ரூபாய் வரை கடன் உதவி அளிக்க கனரா வங்கி முன்வந்துள்ளது.

ஜெர்மன் தொழுநோய் நிவாரணம் சங்கமும் கனரா வங்கியும் சேர்ந்து உருவாக்கியுள்ள புனர் வாழ்வு திட்டத்தின் கீழ் கடன உதவி வழங்கப படுகிறது

இந்த தகவலை கனரா வங்கி (சென்னை) துணை ஜெனரல் மானேஜர் ஆர். ஜி. அகுஜா வெளியிட்டார் நிருபர்களிடம அவர் கூறியதாவது!

தொழு நோயாளிகளுக்கு கடன் வழங்கும் திட்டம் முதன்முதலில் மராட்டிய மாநிலத்தில் தொடங்கப்பட்டது. இபபோது சென்னைக்கும் அதன் சுற்றுப்புறப் பகுதிகளுக்கும் இத்திட்டம கொண்டுவரப் பட்டுள்ளது.

ஜெர்மன தொழுநோய் சங்கம சிபாரிசு செய்தவர்களுக்கு 5 ஆயிரம் ரூபாய் வரை கடனுதவி அளிக்கப் படும. தறபோது 700 பேருக்கு சிபாரிசு செய்யப் பட்டுள்ளது.

இந்த கடனுக்கு குடுப்ப வருவாயை பொறுத்து வட்டி நிரணயிக்கப்படும். மாதம் 300 ரூபாயகு குறைவான வருமானம் உள்ளவர்களுக்கு 4 சதவீதம் வட்டி வசூலிக்கப்படும்.

இவ்வாறு அகுஜா கூறினார்.

ஜெர்மன் தொழு நோய் நிவாரண சங்கத்தின் மக்கள் தொடர்பு அதிகாரி பேராசிரியர் ஏ. ஆர். கே. பிள்ளைகூறியதாவது:-

இந்த சங்கம் இந்தியாவில் மட்டுமல்லாமல் 64 நாடுகளில் கடந்த27 ஆண்டுகளுக்கும் மேலாக தொழு நோய் நிவாரண பணியில் ஈடுபட்டுள்ளது.

இந்தியாவில்77 பெருந் திட்டங்கள்மூலம் 2கோடி தொழு நோயாளிகளுக்கு உதவிவருகிறோம்.

மேற்கு ஜெர்மனிநாட்டு மக்கள் அளிக்கும் நன் கொடை உதவியால்இந்த சங்கம் செயல்படுகிறது.

கனரா வங்கியை பின் பற்றி மற்ற வங்கிகளும் நிதி நிறுவனங்களும் தொழு நோயாளிகளுக்கு உதவ முன்வர வேண்டும் இவ்வாறு பேராசிரியர் ஏ. ஆர். கே, பிள்ளை கூறினார்.

இந்தப் பேட்டியின் போது கனரா வங்கி துணை ஜெனரல் மானேஜர்கள் கே. ஜி காமத், ராம்மோகன்ராவ் ஆகியோர் உடனிருந்தனர்.

முன்னதாக சங்கத்தின் பிராந்திய செயலாளர் ஜெயராஜ் தேவதாஸ் வரவேற்று பேசினார். தொழில் நுட்ப ஆலோசகர் ஆர். எஸ். மணி நன்றி கூறினார்.

அலங்காநல்லூர் அருகே

# தீ விபத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு பாலகுரு ஆறுதல்

மதுரை, செப். 20— மதுரை மாவட்டம் சோழவந்தான் தொகுதியைச் சேர்ந்த அலங்காநல்லூர் அருகேயுள்ள குமாரத்தில் 7 வீடுகளும் 10 கடைகளும், மணியஞ்சியில் 5 கடைகளும் அரசு உயர் நிலைப்பள்ளியில் 2 செட்டுகள் மற்றும் பள்ளி ஆவணங்களுடன் எரிந்து சாம்பலாகி விட்டது. மதுரை மாவட்ட பால்வளத்தலைவரும் சோழவந்தான் முன்னாள் எம்.எல்.ஏ யும் ஆன வெ. பாலகுரு சம்பவம் நடந்த இடத்தை பார்வையிட்டு பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறி அரசு உதவித் தொகை ரூ. 200 கிடைக்கவும், உணவு வழங்கவும் ஏற்பாடு செய்தார். அவருடன் அலங்காநல்லூர் ஒன்றிய செயலாளர் பிச்சையப்பன்எம் ஜி ஆர். மன்ற செயலாளா சேது, பாலமேடு ரத்தினம், குமாரம் கிளைச் செயலாளர் சுப்பையா ஆகியோர் சென்றனர், குமாரம் கழக கிளை சார்பில் உணவு வழங்கப்பட்டது.

# பொற்கோவிலில் உள்ள ராணுவம் வெளியேற ஏற்பாடு

புதுடெல்லி, செப். 20 சீக்கியரின் பொற் கோவில் வளாகத்திலிருந்து ராணுவத்தை வாபஸ் பெறுவதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

பஞ்சாபில் ஏற்பட்ட கலவரத்தை தொடர்ந்து பொற் கோவிலுக்குள் ராணுவம் அனுப்பப்பட்டுள்ளது தெரிந்ததே.

அங்கிருந்து ராணுவத்தை வாபஸ் பெறுவது குறித்து அரசு பிரதிநிதிகளுக்கும் சீக்கிய மதகுருக்களுக்கும் இடையேபேச்சு நடந்து வருகிறது.

ஆயுதங்களை குவிக்கவும் தீவிரவாதிகளுக்கு அடைக்கலம் கொடுப்பதற்குமான சமூகவிரோத காரியங்களுக்காக கோவில் தவறாகபயன் படுத்தப் படக் கூடாது என்று உறுதிமொழி அளிக்கப் பட்டால் விரைவில் உரியவர்களிடம் கோவில் நிர்வாகம் ஒப்படைக்கப்படும் என்று அரசு அதிகாரி ஒருவர் அறிவித்தார்.

கோவிலுக்குள் மீண்டும் ஆயுதங்கள் கடத்தப் படாது என்ற முழு நம்பிக்கை அரசுக்கு ஏற்பட வேண்டும் என்று அந்த அதிகாரி சொன்னார்.

அண்ணா பவளவிழாவை ஒட்டி

# ஏழைகளுக்கு மருத்துவ சிகிச்சை

சென்னை, செப். 20 செங்கை புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். இளைஞர் அணி தலைவர் டாக்டர் சி. அன்பரசு அண்ணா பவள விழாவை ஒட்டி ஏழை எளியமக்களுக்கு குறைந்தகட்டணத்தில் சிகிச்சைசெய்துவருவதாகவும், அனைவரும் இதனை பயன்படுத்திக் கொள்ள வேண்டும் எனவும் கேட்டு கொண்டுள்ளார். டாக்டர் அன்பரசுவின் மருத்துவமனை, 305 கொன்னூர் நெடுஞ்சாலை அயன்புரத்தில் உள்ளது.

# தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர் கழக தலைவர் நீக்கம்

சென்னை, செப். 20— தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுனர்கள் கழகத்தன் மாநிலநிர்வாகிகள்கூட்டம் கடந்த 6-ந் தேதி மதுரை சுற்றுலா மாளிகையில் நடந்தது.

புரட்சித் தலைவரை ஆதரிக்கும் தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுனர்கள் கழகத்திற்கு எதிராக எஸ். டி. சோமசுந்தரம் அணியில சேர்ந்துகொண்டு செயல்படும். கே சீனிவாசன் மாநிலதலைவர் பொறுப்பு உள்பட அனைத்து பொறுப்புகளிலிருந்தும் நீக்கி வைக்க கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

எனவே ஓட்டுனர்கள் கழகத்துடன் தொடர்புள்ளவர்கள் அவருடன் எந்தவித தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொளவதாக தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுனர்கள் கழக மாநில பொதுச் செயலாளர் பெ பஞ்சாட்சரம் ஓர் அறிக்கையில கேட்டுக் கொண்டுள்ளார்.

# சென்னையில் பூம்புகார் பொம்மை கொலு கண்காட்சி துவங்கியது

சென்னை, செப். [illegible] "பூம்புகார்" பொம்மை கொலு கண்காட்சி சென்னை ராஜாஜி மண்டபத்தில் நேற்று தொடங்கியது.

"பூம்புகார்" என்ற சிறப்புப் பெயரில் இயங்கி வரும் தமிழ்நாடு கைத்திறன் தொழில் வளர்ச்சி கழகம் ஆண்டுதோறும் அழகு வண்ண பொம்மை மற்றும் கலைப் பொருட்கள் கண் காட்சியை நடத்திவருகிறது.

இந்தஆண்டு பொம்மை கொலு கண்காட்சி சென்னை ராஜாஜிமண்டபத்தில் நேற்று தொடங்கியது. வரும் 30ம் தேதி வரை இந்தக்கண்காட்சி நடைபெறுகிறது.

இதுகுறித்து 'பூம்புகார்' நிறுவன விற்பனை மேலாளர் பி.எஸ். ஸ்ரீ கண்டன் விற்பனை கூட பிராந்திய மேலாளர் ஆர். கிருஷ்ணசாமி நிருபர்களிடம் கூறியதாவது:

ராஜாஜி மண்டபத்தில் நடைபெறும் கண்காட்சியில் ரூ 1 முதல் 500 ரூபாய்வரை மதிப்புள்ள கலைப் பொருட்கள் பொம்மைகள் விற்பனை ஆகின்றன.

## கலைஞர்கள் பங்கேற்பு

கைத்திறன் கலைஞர்கள் பலர் தங்களுடைய உற்பத்திப் பொருள்களுடன் இந்தக் கண்காட்சியில்கலந்துகொள்கிறார்கள்.

சென்னை, செங்கல்பட்டு, தென்னாற்காடு மாவட்டம் மற்றும் கர்நாடக பாண்டிச்சேரி மாநிலம் ஆகியவற்றைச் சேர்ந்த கைவினைஞர்கள் உற்பத்தி செய்த அருங்கலைப் பொருட்கள் இந்த கண்காட்சியில் இடம் பெற்றுள்ளன.

இந்த கண்காட்சி பூம்புகார் நிறுவனம் நடத்தும் 9-வது ஆண்டு கண்காட்சி ஆகும்கடந்த 1981 ஆம் ஆண்டு வரை இந்தப் பொம்மை கொலு கண்காட்சி மயிலாப்பூர் கபாலீசுவரர் ஆலயத்தில் நடைபெற்று வந்தது கடந்த 3 ஆண்டுகளாக ராஜாஜி மண்டபத்தில நடக்கிறது.

## ரூ. 3 கோடி விற்பனை

பூம்புகார் நிறுவனம் ஆண்டுதோறும் சுமார் ரூ. 2 கோடியே 30லட்சம் பெறுமானம் உள்ள கைவினைப் பொருள்களை விற்பனை செய்து வருகிறது.

இந்த ஆண்டு சுமார் இரண்டரை கோடி முதல் 3 கோடி ரூபாய் பெறுமானம் உள்ள கலைப் பொருட்கள் விற்பனை செய்யப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஒவ்வொரு ஆண்டிலும் சுமார் 15 லட்சம் ரூபாய் பெறுமானம் உள்ள பொருள்கள் பிரிட்டன், அமெரிக்கா, சிங்கப்பூர் மலேசியா முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதிசெய்யப் படுகிறது.

இவ்வாறு அவர்கள் தெரிவித்தனர்.

தமிழ் நாடு கைத்திறன் வளர்ச்சிக்கழக(பூம்புகார்) மக்கள் தொடர்பு அதிகாரி பி. சத்தியநாதன் கண்காட்சி ஏற்பாடுகளை செய்துள்ளார் நிருபர்களின் கேள்விகளுக்கு சத்தியநாதனும் பதில் அளித்து கண்காட்சி பற்றி விளக்கினார்.